60. நம்மவர் எழுதிய திருநான்மறை விளக்கம். 25 வது பக்கத்தில் "சுத்த வித்தையில் எழும் அருள்நாத ஒலியாகிய "ஓங்காரத்தின் வாயிலாக உவமையிலாக் கலைஞானத்தை உதவ "அங்ஙனம் உதவப்பெற்றூர் இயற்றிய நூலே ஆகமமாமெனச் "சுவாயம்புவத்திற் கூறியவாறே நால்வர்க்கருளிய விடத்தும் "மறைகள் எழுவதாயினவெனக் கோடலே மூவகை அளவைக் "கும் ஒத்ததாமெனவெழுதி 218-வது பக்கத்திலும் அவர் கருத்தை வலுபுறுத்திக் கூறியிருக்கின்றூர். சுவாயம்புவத்தின் வாக்கியங்களைக் காட்டாது இவர் எழுதி யிருப்பதைக் கொண்டே ஒருவித முடிபுக்கு வருவது உண்மைபயவாது. "மூவகை அளவைக்கும் ஒத்ததாம்'' என்றூரே, அதைப் பரியாலோசிப்பாம். மூவகை அளவையாவன காண்டல், கருதல், உரை யென்பன. கடல்கோளில் அழிந்துபோனதாக நம்மவர் சொல்லுந் தமிழ்நான்மறை இவராலும் மற்றெவராலுங் காணப் படாததொன்றும். ஆதலால் காண்டல் அளவையால் இவர் கோள் சாதிக்க முடியாது. மலையில் காணும் புகையைக்கண்டு அங்கு அதன் காரணமாகிய நெருப்புண்டென்று சித்தாந்தப் படுத்துவதுபோலக் காணப்படும். ஒன்றைக் கண்டுதான் அதற் குக் காரணமான மற்ரென்று உண்டெனத் தாபிக்கப்படவேண் டும். தமிழில் நான்மறையிருந்ததெனத் தமிழுலகு தோன்றியது முதல் இதுகாறுந்தோன்றிய செந்தமிழ்க் கல்வியாளர்களில் ஒருவரும் இவ்விதக் கருத்துக் கொண்டிலராதலானும் அந்நான் மறையின் மணங்கூட முகருதற்கிலாமையானும், கருதலளவை யானுந் தாபிக்கவியலாது. நமது வடமொழிக்கும், வேதசிவாக மங்கட்கும், வேதக்கொள்கைக்கும் விரோதியாயெழுந்த ஒருவர் தக்க பிரமாணங்காட்டாது அவரொருவர் கருதியதே பிரமாணமாகாது. தமிழ்நான்மறையென வொன்றிருந்ததென்பது வைதிக, சைவ, வைணவ தமிழ் நூல்கள் ஒன்றிலாவது, சங்க நூல்கள் ஒன்றிலாவது சொல்லப்படாதிருப்பதனல் நம்மவர் கூற்று உரையளவை யானுந் தாபிக்கப்படவில்லை யெனத் திண்ணமா யுரைக்கலாம். இவ்வகையில், நம்மவர் கோள் மூவகை யளவையின் ஒன்றுலும் சாதிக்கப்படவில்லை யென்பதே முடிபாம்.

61. இதுகாறுங் கண்ட ஆராய்ச்சியால் வேத சிவாகமங்கள் சிவபெருமான் வாக்கே யென்பதும், அவைகளே ஆதியிலுண்டான முதனூல்களென்பதும், அந்நூல்களினின்றே உலகத்திற் காணப்படும் எவ்வகை நூல்களும் பல ஆசாரக் கொள்கைகளும் ஆன்மாக்களின் கன்மத்துக்கும் காலதேய வர்த்தமானத்துக்கு மிணங்கத் தோன்றின வென்பதும் ருக்கு வேதஞ் சிவபிரானையே முழுமுதற் கடவுளெனக் கூறுமென்ப

தும், தமிழ்த் திருமுறைகள் வேத சிவாகமப் பொருளே யென்பதும் ஆரியருக்குந் தமிழருக்குந் தந்தையார் சிவபிரானே யென்பதும், அதுபோலவே, அவரே இருமொழிக்குங் குரவ ரென்பதும், நான்மறை ஆறங்கம் இருபத்தெட்டு ஆகமங்கள் தமிழில் இருந்தனவென்பது கற்பனையே யென்பதும், தமிழில் நான்மறை யிருந்ததாகத் தேவார திருவாசகங்களிற் கூறியிருப்பதாகச் சொல்வது முயலுக்குக் கொம்பு மூன்றுமுள மென்பது போலவே யென்பதும், தொல்காப்பியர், சங்கப்புலவர்கள், சைவசமயாசாரியர்கள் ஆதியாகச் சந்தானுசாரியர்களீருகவும், அக்காலமுதற் சிவஞான முனிவரீருகவும், இவர்களுள்ளிட்ட எவரும், தமிழ் ஆராய்ச்சியிற் புகுந்திருந்த புறமதக் கல்விவாணர்களும் இதுகாறுந் தமிழில் நான்மறை ஆதிய மூவகை நூல்கள் இருந்தனவென்று கூறவில்லை யென்பதும், பிறவும், பசுமரத்தாணிபோற் பதித்து நாட்டப்பட்டன.

தமிழ்ச்சைவ உலகு இதுகாறும் எவ்வகைக் குழப்பத்திற்கும் உட்படாமல் மிக்க சாந்த குணமுடையதாகிச் சிவபெருமானை வழிபட்டுத் தேவார திருவாசக முதலிய தோத்திர ரூபமான அருட்பாக்களையும் சாத்திர ரூபமான சிவஞான போதம் முதலிய நூல்களையும் ஓதியுணர்ந்து சிவனருள் பெற்று வந்திருக்க, அவ்வுலகத்தார்களுட் பிரிவு உண்டாமாறும் தம்முட் சமமாய்க் கூடி வாழ்ந்த தமிழும் வடமொழியும் போராட்டஞ் செய்யுமாறும் இக்காலத்துப் படித்த சிலர் நவீனக் கற்பனை செய்து வருகின்றார்கள். என்ன கற்பனை கற்பித்தும் ஆரிய வேதங்களும் தமிழ்மறைகளும் ஒன்றுக்கொன்று அனுசரணையாயிருந்து பொருளில் வேற்றுமைப்படாது சைவசமயப் பகுதிகளை விளக்கிக் கொண்டிருப்பதைக் காட்சிப் பிரமாணத்தாற் காண்கின்றபடியால் அவைகளை அறவே மறைக்க முடியாமையினாலே, முன்னமே யிருந்த தென்னாட்டுச் சைவப் பகுதிகளை ஆரியர்கள் அவர்கள் வேதங்களுட் புகுத்திக் கொண்டார்களென்றும் சைவ சமயாசாரியர்களும் வேதத்துட் போந்த சைவப் பகுதிகளைப் போதித்தார்களென்றுந் தந்திரமாக வெழுதித் திருநான்மறை விளக்க மென்னுமொரு வியாசமெழுதப் பட்டிருக்கின்ற தென்பதும் இவ்வாராய்ச்சியால் நன்கு விளக்கி யிருத்தலைச் சைவசமயிகள் உய்த்து நோக்கி உண்மை கடைப்பிடிக்கக் கடவார்கள்.

" சுருதிவானவனுந் திருநெடுமாலாஞ் சுந்தரவிசும்பி னிந்திரனும்
பரிதிவானவனும் படர்சடைமுக்கட் பகவனும கவுயிர்க்கமுதாம்
எருதுவாகனனும்எயில்கண்மூன்றெரித்தவேறுசேவுகனுமாம்பின்னும்
கருதுவார்கருது முருவமாங் கங்கைகொண்ட சோளச்சுரத்தானே "

என்னுந் திருவிசைப்பா அருண்மொழிப் பொருளையும், "யாதொரு தெய்வங் கொண்டீ ரத்தெய்வமாகி யாங்கே மாதொருபாகனர் தாம்வருவர்" என்னுஞ் சிவஞான சித்தியாரின் செய்யுட் பொருளையும், "மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார், நிலமிசை நீடுவாழ்வா" ரென்னும் உத்தரவேதப் பொருளையுமுணர்ந்த நம்மனோர் சைவசமய முறைப்படி சிவபிரானையும் அவரது திருவேடமாகிய திருநீறு, திருக்கண்மணியையும், அவரது மெய்யடியார்களையும் எந்நாளும் மறவாமற் பேணி, வாழையடி வாழையாகச் சைவவுலகிற் பல்கிப்பரவியோங்கி நம், தவப்பயனாக அவதரித்த நந்திராவிட பாடியகர்த்தர், நமது மூதாதையர்கள், இவர்கள் வகுத்த வழியேயொழுகி வருமாறு அனுக்கிரகிக்கும்படி சிவபிரானைக் காயத்தாலும் வாக்காலும் மனத்தாலும் வணங்கி வாழ்த்தித் தியானித்து இதனை முடிக்கின்றோம்.

திருச்சிற்றம்பலம்.

சுபம். சுபம். சுபம்.

---

மழை வழங்குக மன்னவ னோங்குக
பிழையில் பல்வள னெல்லாம் பிறங்குக
தழைக அஞ்செழுத் தோசை தரையெலாம்
பழைய வைதிக சைவம் பரக்கவே.

---

பரசிவன் றனதுயர்ச்சியே தெரிப்பதிற் பகரொருப் பாட்டிற்று
யரியகால் கதிர் வியாதனுதியர் மொழியால் விளங்கிடு நீர்த்தாய்த்
திரிவுகாட்சிய ருளத்துறு தறிகிகர் செம்பொருட்கோ வைத்தாய்
விரியுநீ ருலகினுக் கிதந் தருமுதல் வித்தையோங்குக மாதோ.

**திருநான்மறை விளக்க ஆராய்ச்சி**
**முற்றுப்பெற்றது.**

---

ஸ்ரீ மெய்கண்டதேசிகன் திருவடி வாழ்க.

---

